# ஸ்ரீராகவேந்திர மகா காவியம்



ஆசிரியர்
புக்குளம்ஸ்ரீராகவேந்திரப் புலவர்

ஆசிரியர்
புக்குளம்ஸ்ரீராகவேந்திரப் புலவர்

மு. இராமன் M.A. M.Ed.

ஸ்ரீ ராகவேந்திரர் துணை

# ஸ்ரீ இராகவேந்திர மகாகாவியம்

மாத இதழ்

பூஜ்யாய ராகவேந்த்ராய சத்யதர்ம ரதாயச

பஜதாம் கல்ப வ்ருக்ஷாய நமதாம் காமதேனவே

கொத்து 1 ஜுன் 92 தளிர் 7

சிவந்தனை நினை

நவந்தருஞ் செயல்

தவம் என உணர்

பவம் அறுத் துயர்




## பொருளடக்கம்

# தலையங்கம்

அன்பார்ந்த வாசகப் பெருமக்களே! எல்லாம் வல்ல ஸ்ரீ ராகவேந்தரப் பெருமானின் பேரருளால் தொடங்கப் பெற்ற ஸ்ரீ ராகவேந்திர மகா காவிய மாத இதழ் நன்முறையில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. சிலபல காரணங்களால் ஓரிருசமயம் தாமதமாகவும் தடையும் ஏற்பட்டாலும், நன்மையாகவே முடிகிறது. எனவே அடியேனை வழி நடத்திச் செல்லுகின்றார். ஸ்ரீ ராகவேந்திரப்பெருமான் என உணருகிறேன். இதனைக்கண்கூடாகக் காணும் வாய்ப்பைப் பெறுவதற்கே அடியேனுக்கு அல்லலைக் கொடுத்தாட் கொண்டுள்ளார்.

"யான் பெற்றபேறு பெறு கயிவ்வையகம்"

என்று தான் கூறமுடியும்அன்றியும் எனக்குக் கிடைத்தயின்பத்தை மற்றவர்களும் அடைய வேண்டுமென்பதே எனது பேராவல்.

விலையுயர்ந்த பொன்னாயினும் துன்பப்படாமல் மிளிர்வதில்லை. செம்மையான மனம்படைத்தவராயினும் உலகத் துன்பத்தை உணர்ந்தால் தான் உலகில் மற்றவருக்கு உதவவேண்டுமென்ற குறிக் கோளைக் கொள்வார்கள் மற்றவருக்கு உதவும் வாழ்க்கை தான் மானிட வாழ்க்கை. மனிதன் தானும் வாழ்ந்து கொண்டு மற்றவருக்கும் வாழ்வளிக்கின்றான். ஆனால் தெய்வத்தன்மை தன்னையே அர்ப்பணித்துக்கொண்டு உலக நலத்தைக் காக்கின்றது.

தெய்வத் தன்மையிலே மிகச்சிறந்து விளங்கி உலக நலத்தைக் காத்துக்கொண்டிருக்கின்றார் ஸ்ரீ ராகவேந்திரர்.

"பொன்னையே பொருளே வேண்டாய் பூவுல கதனை வேண்டாய்
தன்னையே உலகுக் கீந்த தனிப்பெரும்ராகவேந்தரா"

என்று துறவற காண்டத்தின் ஸ்ரீ ராகவேந்திர துதியில் அடியேன் துதித்திருக்கின்றேன். அவ்வாறு அவரை வணங்க வேண்டுமென்ற ஞானமும் அவரே அளித்த தாகும்.

"அப்பா நான் வேண்டுதல் கேட் டருள் புரிதல் வேண்டும்"

என்ற வள்ளல் பெருமானின் வாக்கினை ஓர்க. எனவே அடியேனுக்கு ஓர்துன்பம் வந்தால் அதற்குக் காரணம் இருக்கும் அது நன்மையாக முடியும்என உணர்ந்துள்ளேன். எனவே வாசகப் பெருமக்களே அடியேன் இந்த இறை பணியையாற்றுவதற்கு எவ்வகையில் உதவமுடியும் என உணர்கின்றீர்களோ அவ்வகையில் உதவி ஸ்ரீ ராகநேந்திரப் பெரு மானின் அருளை மிக விரைவில் பெறுவதற்கு உறுதுணையாவீர்கள் என வேண்டுகிறேன்.

அன்னையிடத்து அடியேன் தோற்றமும்
சென்னை வந்தே சிறப்பினைப் பெற்றதும்
முன்னை வினையை முழுதும் அறிந்திட
என்னை அருளினர் ஸ்ரீ ராகவேந்திரர்

ஆசிரியர்.

# ஸ்ரீ இராகவேந்திரர் வாழ்க்கை வரலாறு

தனது தேனிலவு நாட்களில் வெங்கண்ணப்பட்டர் மிகவும் மகிழ்வுடனும் குதூகலத்துடனும் காணப்பட்டார். அவர் தனது மனைவியுடன் தனது கிராமத்தில் வாழ்ந்தார். ஆனால் விரைவில் பொருளாதார நெருக்கடியில் அகப்பட்டுக்கொண்டார். அவரது தந்தையார் அரசாங்க ஆதரவைஇழந்து, வாழ்வின்கடைசிப்பகுதியில், கடும் வறுமையடைந்து பெரும் துன்பமுற்றார். தந்தையார் மரணத்திற்குப் பின் சகோதரர் குருராஜர் லட்சுமி நரசிம்மாச்சாரியரின் உதவியினால் குடும்பத்தை நடத்துவதற்கு ஒருவழியாக முயற்சித்தார். அவர் வேதவித்தையில் ஓரளவிற்கு தேர்ச்சியடைந்திருந்ததால், சில சீடர்களுக்கு அத்தியயனம் செய்வித்தும், செல்வந்தர்களை அணுகியும், தனது குடும்பத்தை சிரமமின்றி நடத்தினார். ஆனால் வெங்கண்ணபட்டர் சுயமரியாதையுள்ள மனிதரான படியால், யாரையும் யாசித்தோ, பிறரின் செல்வத்தை நம்பியோ வாழவில்லை. அது மட்டுமின்றி ஒரு சிறந்தபண்டிதராகும் குறிக்கோளைக்கொண்டிருந்தார். ஜெயதீர்த்தரால் அழகாக விளக்கப்பட்ட மத்வரின் கொள்கைகளைப்பரப்புவதற்கு மிகுந்த ஆர்வத்துடனிருந்தார். ஏனெனில், கடவுளுக்கு செய்யும் பெருந்தொண்டு என்று இதை எண்ணினார் பிறகு தியானத்தில் மூழ்கி மிகுந்த ஆனந்தத்துடன் யோகானுபூதியில் ஒன்றி விட விரும்பினார். ஆனால் இவை எல்லாம் வறுமைவாழ்வின் தொந்தரவுகளினால் முளையிலேயே கிள்ளிஎறியப்பட்டன. இந்த எண்ணத்தில் மிகவும் ஆழ்ந்திருந்தாலும், அவரால் தனது பிரச்சனையிலிருந்து விடுபட, தீர்வு காணமுடியவில்லை. இப்படியாக நாட்களும் மாதங்களும் உருண்டோடின. மேற்கொண்டு படிப்பதற்காக லட்சுமி நரசிம்மாச்சாரியிடம் செல்ல எண்ணினார். ஆனால் தனது மனைவி அதற்கு தடையாய் இருப்பதைக்கண்டு, அந்தஎண்ணத்தை விட்டுவிட்டார். இளம் வெங்கண்ணபட்டரின் அன்பிற்குரிய மனைவி சரஸ்வதிபாய் ஆவார். அவள் அவரிடம் மிகவும் பக்திகொண்டு, அவரது விருப்பு வெறுப்புக்களை இயற்கையாகவே, அறிந்துவைத்திருந்தாள். கடவுளிடமும் கல்வியிடமும் மிகுந்த பக்தியுடைய, புனிதமான ஒரு இளைஞனை மணந்ததற்காக அவள் கடவுளிடமும் நன்றி கூறினாள். குடும்பத்தின் ஏழ்மைநிலையை அவள் மிகநன்றாக அறிந்திருந்தாள். தன்னை திருப்தியுடனும், மகிழ்வுடனும் வைத்திருப்பதற்கு தனது கணவன்

பெரும் முயற்சிகளை மேற்கொண்டிருப்பதையும் உணர்ந்திருந்தான். துன்பமென்னும் கடும்புயல்காற்று பலங்கொண்டுதாக்கிடினும் உறுதியான பாறை போன்று அவர் மனம் கலங்காதிருப்பதையும் அறிந்திருந்தாள். வாழ்வில் தீங்குகள் ஏற்படும் எல்லா நேரங்களிலும் தஞ்சமளிக்கும் மூலராமரிடமிருந்து தான் அவரது மனவுறுதியின் சக்தி வருகிறது என்பதையும் அவள் கண்டுணர்ந்தாள். ஒவ்வொருவரும், மற்றவரின் உணர்வுகளுக்கு மிகுந்த மரியாதை அளித்தனர், எப்போதாவது, ஒருவர் துக்கமான, கலங்கியமனோநிலையில் இருப்பதை மற்றவர் பார்த்துவிட்டால், நகைச்சுவை கலந்த சாமர்த்தியப்பேச்சினால் இருவரும் துக்க நிலையிலிருந்து விரைவில் மீண்டுவிடுவார்கள் விரைவில் சரஸ்வதிபாய் கர்ப்பமடைந்து பத்துமாதத்தில் ஒரு மகனை ஈன்றெடுத்தாள். எல்லா புனிதசடங்குகளும் முறைப்படி நடத்தப்பட்டது. மகனுக்கு லட்சுமி நாராயணன் என்று பெயர் சூட்டினர்.

குடும்பம் பெரியதானவுடன் மேலும் மேலும் அதிகமாக வறுமையை உணர்ந்தனர். இறையருளுக்குப் பாத்திரமான கொஞ்சம் பேர்கள் மட்டும் கடும் வறுமையினால் சோதிக்கப்படுகின்றார்கள் ஏனெனில், ஒரு மனிதனுக்கு நன்மை செய்ய திருவுளம் கொண்டால்அவனது பொருட்செல்வத்தை முதலில் பிடுங்கிக் கொள்வதாக கடவுள் கூறியுள்ளார். இந்தக் கூற்றிற்கு வெங்கண்ணபட்டர் தக்க எடுத்துக்காட்டாக விளங்குகிறார். கொடுமைப்படுத்தும் தட்டும்பாட்டினாலும், சொல்லொணா வறுமையினாலும் அவர் அடைந்த அல்லல்களை விவரிப்பதற்கு மிகவும் கடினமாகும். துவாபரயுகத்தில் குசேலரின் வறுமை, கலியுகத்தில் வெங்கண்ணபட்டரின் பயங்கர வ-றுமையாக திரும்ப வந்தது போலும்.

மொத்த குடும்பமும் கீழானவறுமையில் வாழ்ந்தது. சரஸ்வதிபாய் க்கு கட்டின சேலை ஒன்று மட்டுமே இருந்தது. அதுகூட கிழிந்திருந்த து. அவளது மகன் லட்சுமி நாராயணனோ உடலில் துணியின்றி காட்சியளித்தான். அவளது கணவனிடம், ஆயிரம் கண் உடைய ஒரு துணியைத்தவிர வேறெதுவும் இல்லை. அவரது மனைவிக்கு ஆண்டுக்கு ஒருமுறை ஒரு துணி கிடைத்தது.

ஒரு நாளைக்கு வேண்டிய உணவுப் பொருள் கூட அவர்களிடம் இல்லை. காய்கறியுடன், அரிசியைக் காண்பது அரிதாகியது. தலைமயிருக்கு எண்ணெய் ஆண்டுக்கு ஒருமுறை கூட கிட்டவில்லை.

அவர்களது திருமணத்தில் மட்டுமே நெய் பரிமாறப்பட்டது. உணவு பரிமாற இலைகூட அவர்களுக்கு அகப்படவில்லை. ஆகவே சில நேரங்களில் தரையில் உணவு பரிமாறப்பட்டது.

இருப்பினும், இருவரிடமிருந்து எந்த ஒரு முனுமுனுப்போ, ஏக்கச்சொல்லோ வெளிப்படவில்லை. குடும்பக்கஷ்டம் சரஸ்வதிபாயை மேலும் பணிவுள்ளவளாக்கியது. அல்லல்கள் வெங்கன்னபட்டரை கடவுளிடம் மேலும் பக்தியுள்ளவராக ஆக்கியது. இதை இறைவனின் ஆணையாக ஏற்றுக்கொண்டு இந்த நிலையை இருவரும் எவ்விதஎதிர்ப்புமின்றி சமாளித்தனர்.

ஒரு நாள் வெங்கன்னபட்டர் குறித்து, பூஜைசெய்து விட்டு வந்தார். சமையலறையை எட்டிப்பார்த்தார். அங்கு எந்த அரவமுமின்றி அமைதியாகஇருந்தது. அடுப்பில் தீ இல்லை.

வெங்: ஏன்! என்ன விஷயம்?

சரஸ்: கடவுளுக்கு நைவேத்தியம் செய்வதற்கு ஊழ் என்னை தடுக்கிறது.

வெங்: இது உன்னிடம் வருத்தத்தை ஏற்படுத்தத் தேவையில்லையே.

ஒரு இலை, ஒருமலர், ஒருகனி, ஒரு உத்தரணி தீர்த்தம்-ஏதவாது ஒன்றை அன்புடன் அர்ப்பணித்தால் கடவுள் அதை ஆனந்தத்துடன் ஏற்றுக் கொள்கிறான். மெய்யன்புடன் அர்ப்பணம் செய்வதுதான் மிகவும் முக்கியமாகும். ஆனால் நம்மிடம் மெய்யன்பு இல்லாதிருப்பது வருத்தத்திற்குரியதாகும் நாம் வெளி வேஷத்திற்காக நிறைய செய்கிறோம்.

சரஸ்: ஆனால் எரியோம்பல் செய்வற்கு எதை அர்ப்பணிப்பது,

வெங்: திரவிய அர்ப்பணத்தைப் போன்றே மனோபாவ அர்ப்பணத்திற்கு சக்தியுள்ளது.

சரஸ்வதிபாயினால் மேலும் பொறுத்துக்கொள்ளமுடியவில்லை. பெண்களுக்கே உரிய இயல்புடன் அவள் பொலபொலென கண்ணீர் உகுத்தாள் ஆனால் விரைவில் உதடுகளை இறுக்கிக் கொண்டு, தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள் மிகுந்த சுயக்கட்டுப்பாட்டுடன் அவள் பேச்சைத் தொடர்ந்தாள்.

சரஸ்: வேதாந்த விவாதங்களையும் உணவு உண்ணாமல் தொடரமுடியாது.

அவளது துக்கத்திற்கு காரணத்தை வெங்கண்ணபட்டர் அறிந்திருந்தார். உடல் வாழ்க்கையை வாழுபவர்கள், வாழ்க்கைக்கு இன்றியமையாததாக உணவினைக்கருதி, உணவிற்கு மிகையான ஏற்றத்தை அளிக்கின்றனர். ஆனால் ஆன்மவாழ்வை வாழுபவர்கள், உணவு மற்றும் வாழ்வின் பிறதேவைகளின் மீது ஆதிக்கம் செலுத்த வல்லவர்கள். அவர் தியானத்தில் ஆழ்ந்தபின் மொத்த பிரச்சினைக்கும் தெளிவானதீர்வைக் கண்டார். இப்படியாக அவர்தெளிவடைந்து மிகுந்த புத்துணர்வுடன் தியானத்திலிருந்து மீண்டார். அவர் ஆனந்தத்துடன் பேச்சைத் தொடர்ந்தார்.

வெங்: ஏன்! தியானம், உணவிற்கு ஒரு நல்ல மாற்றுப் பொருளாயிற்றே! நீ ஏன் இவ்வளவு வாட்டத்துடன் இருக்கிறாய் என்று எனக்குத் தெரியும். பட்டினிகிடக்கும் நம்மைவிட நமது குழந்தைக்காக நீ மிகவும் கவலைப்படுகிறாய் அது ஒரு அன்பான தாயிடம் இருக்கும் பெருமைக்குரிய குணம் ஆகும். ஆனால், கொஞ்சம் அரிசிக்காக அடுத்தவர்களின் வாசலில் நான் கையேந்தியாசிக்கட்டுமா? ஆற்றல், கொடைக்குணம், கருணை செலவவளம் ஆகியவை எல்லாம் கொண்ட கடவுள் இருக்கிறார். அவரது அருள் மட்டுமே நம்மை காப்பாற்றும் நம்மைப்போன்று சார்புள்ளவர்களான பிறரிடம் நாம் யாசிக்கமுடியாது, யாசிக்கக்கூடாது. இது வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது. அவரை நினைத்து தியானம் செய்து ஸ்ரீ அரியால் நமக்கு விதிக்கப்பட்ட செயல்களைச் செய்வது நமது கடமையாகும். அரி என்ன தருகிறாரோ அது நமக்கு நன்மையானதாகும். இவ்வாறு உலக ஆசிரியரான மத்வர் அருளிச்செய்கிறார். அத்தியாவசியப் பொருள்களுக்காக அல்லது போகப்பொருள்களுக்காகக் கூட இறைவனிடம் கையேந்துவதில் தவறோ, பாவமோ இல்லை. வாழ்வின் துக்கங்களிலிருந்து நம்மைகாப்பாற்றுவதற்கு கடவுளிடம்நாம் பிரார்த்திக்திகலாம். அவர் நமது வேண்டுதல்களுக்கு செவிசாய்ப்பார்.

தனது வறுமையை கடவுள் நீக்குவார் என்றெண்ணி குசேலர், கிருஷ்ணனின் உதவியை நாடி, ஒருபிடி அவலை அவருக்கு அன்புடன் கொடுத்தார். அரச அதிகாரம் கிட்டுவதற்கு துருவன் ஸ்ரீஅரியை வழிபட்டு கடுந்தவம் இயற்றினான் தனது உயிர் ஆபத்தில் சிக்கிக்கொண்டபோது கஜேந்திரன் நாராயணனை நோக்கி

ஒலமிட்டான். இறைவன் இவர்கள் மூவரின் வேண்டுதல்களுக்கும் செவிசாய்த்து, அவர்களது மனோரதங்களைப் பூர்த்தி செய்தான்.

குசேலரை, ஸ்ரீ கண்ணன் அன்புடன் கட்டி தழுவினான். அவருக்கு வேண்டிய பணிவிடைகளை ருக்குமணி செய்தாள். தன்னை வாட்டி வதைக்கும் கடும் வறுமையைப் பற்றி குசேலர் நினைக்கவேயில்லை. "உண்மையிலேயே எவ்வளவ கருணையுள்ளவர்? அவர் என்னுடன் பேசினார். அவர் எனக்கு அரசமரியாதையுடன் வரவேற்பு அளித்தார். செல்வமும் வசதியும் எனக்குத் தர மறுத்தன் மூலம் எனக்கு நன்மைசெய்தார். அவற்றை என்னிடம் தந்தால் நான் பக்திப்பாதையில் இருந்து நழுவி விடுவேன். என்னே அவன் கருணை" என்று எண்ணிக்கொண்டே தனது குடிசைக்குத் திரும்பினார். ஒரு பெரும் மாளிகையும், குன்றாதசெல்வமும் அங்கு இருக்கக் கண்டார். அறியாமையினால், தற்பெருமையால், வறுமையினால், பட்டினியால் உந்தப்பட்டு இறைவனை நினைத்தாலும் அரிய வரங்களை அவர்கள் மீது பொழிய வேண்டும் என்று சீனிவாசனை வேண்டுகிறார். தேவசர்மா என்ற பக்தர்.

இறைவனது கருணைக்கு இவை எல்லாம் சாட்சிகளாக நம் முன் நின்றாலும், கணநேரமாவது அவனை நன்றியுடன் நினைக்க மறுக்கிறோம். வானில்பறக்கும் பறவைகளுக்கும், நீரில் நீந்தும் மீன்களுக்கும், கல்லுக்குள் வாழும் தேரைகளுக்கும் கூட உணவளிக்கும் பொறுப்பினை அவன் ஏற்றுக்கொள்கிறான். அப்பேர்பட்டவன் நம்மை பாதுகாக்க மறுப்பானா? நேர்மையுடனும், நம்பிக்கையுடனும், நமது இதயத்திலிருந்து நமது பிரார்த்தனை எழ வேண்டும். முன்பு செய்த தீவினைகளின் பயனாக நமக்கு ஏற்படும் தீங்குகளுக்கு அவன்மீது வீண்பழியை போட்டுவிடுகிறோம். உண்மையில், அவனது கல்யாணகுணங்களை நாம் உணரவில்லையெனில் நாம் மிருகங்களைவிட மேலானவர்கள் அல்ல. படைப்புத்தெய்வம் பிரம்மாவே, மிகவும் பணிவுடன், இறைவனைத் துதித்து, தன்னை நெருங்காத தீவினைகளைக் கூட தன் மீது ஏற்றி தன்னை தாழ்த்திக்கொள்கிறார். அரியின் எல்லா நல்ல குணங்களையும் தம் மீது ஏற்றிக் கொண்டு, இறைவனை அகந்தையால்

மனிதர்கள் மறந்து விடுவதாக, இறைவனிடம், மகாத்மாவான விஜயீந்திரர் ஒப்புக்கொள்கிறார். இப்படியாக வெங்கண்ணப்பட்டர் கூறிக் கொண்டு, சமாதியில்மூழ்கி, பணிவுடன் கீழ்கண்டவாறு கதறினார். 'என்னை விடக்கீழானவனை பாவிகளிடையே என்னால் காணஇயலவில்லை. நான் தஞ்சம் பெறக் கூடிய தெய்வம் நீ ஒருவனே. ஆவாய். பாவிகளைக் கரைசேர்க்கக் கூடியவனே! லோகநாயகா! உனது திருநாமத்திற்கு பொருந்திய குணத்தை உண்மையாக நீ பெற்றள்ளாய்'.

சரஸ்வதிபாய், தனது கணவன் ஆழ்ந்த தியானத்தில் இருப்பதைக்கண்டாள். அவளுக்கு உடம்பெல்லாம் அதிர்ந்தது. தனது கணவனை போன்ற உயர்ந்த யோகிகளின் முன்பு உணவிற்காக நச்சரித்தற்கு தன்னையே நொந்து கொண்டாள். அவர் தியானத்திலிருந்து மீண்டதும், அவரது திருவடியில் வீழ்ந்து, வணங்கி, தான் மிகையாக பேசியதற்கு மன்னிப்பு கோரினாள்.

அரியின் ஆக்ஞையாக ஏற்றுக் கொண்டு அவர்கள் இருவரும் தங்களை பட்டினிக்கு உட்படுத்திக் கொண்டனர். ஒரு ஆண்டில் பல நாட்களாக, வெங்கண்ணபட்டரின் வீட்டு சமையலறை அடுப்பில் தீ ஏற்றுப்படவில்லை. பஞ்சாங்கத்தில் இருவாரத்திற்கு ஒருமுறை ஏகாதசி வந்தாலும், அவர் வீட்டில் பலமுறை வந்தது.

ஊழ், அவரை மிகவும் நெருக்கமாக பின் தொடர்ந்து, அவரது நேர்மையின் வலிமையையும் ஒழுக்கத்தையும் மேலும் மேலும் சோதித்தது. ஆனால் வெங்கண்ணபட்டர் கடும் நிலையிலும் கலங்காது நின்று, ஆன்ம பலத்தாலும், தெய்வ நம்பிக்கையாலும் சோதனைகளை வென்றார். ஒருநாள் வழக்கம்போல சரஸ்வதி பாய் காலையில் எழுந்து தனது அன்றாட கடமைகளைச் செய்தாள். ஆனால் தனது உடைந்தபானைகளும், கிழிந்துபோன துணிகளும் மாயமாக மறைந்து போயிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டாள்.

(தொடரும்...)

# பக்த துகாராமும் பாண்டுரங்க விட்டலனும்

- R. உமாபதி

என்னிடம் சிறிது நம்பிக்கை, சொற்ப அறிவு, குறுகிய வாழ்நாள் ஆகியவை மட்டுமே உள்ளது. அவற்றின் மேல் என்னால் ஆதிக்கம் செலுத்த முடியாது. நான், குற்றவுணர்வினால் உருக்கி வார்க்கப்பட்ட சிலை ஆவேன். வேதங்களின் உருவான விட்டலா! என் வார்த்தைகளுக்கு செவி சாய்ப்பாயாக! எப்படி எனது தீவினைகளைக்களைந்து எறிவேன்? நல்வினை, தீவினைகளால் நான் விகாரப்பட்டுள்ளேன். ஒரு இறந்தகாலம் இருந்தது. ஒரு நிகழ்காலம் இருக்கிறது, ஒரு எதிர்காலம் இருக்கும்; முடிவினை அடைய முடியவே முடியாது. எண்ணற்ற செயல்களின் வரலாறு எண்பத்து நான்கு நூறாயிர பிறவிகளின் சுழற்சி, முக்குணங்களின் சங்கமம் ஆகியவை இந்த உடம்பிற்கு சொந்தமானவை; அது நமது முற்பிறவி வினைகளால் ஆன ஒரு சிறை; அதற்கு பிறப்பு, வயது, இறப்பு ஆகியவை நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. பஞ்ச பூதங்களின் தொகுப்பான உடம்பினைப் போன்றதல்ல ஆத்மா. மதிப்பற்ற வெற்றுப்பதடி போன்ற உடம்பு முன்வினைகளால் ஏற்பட்டுள்ளது. மகன், மகள், சகோதரன் போன்ற குடும்ப உறவுகளின் மொத்த கூட்டமும் பெரும் வெள்ளத்தில் ஒன்று சேர்ந்த மரக்கட்டைகள். வெள்ளம் அடங்கினபின் பிரிவதைப் போல் பிரிந்துவிடும். ஆகவே எனது அறியாமைக்கு ஒருமுற்றுப் புள்ளி வைக்கும்படி உன்னிடம் நான்மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்; நீதான் கருணை மிகுந்த லோகநாயகன். துகா உனது பாதங்களைப் பற்றிக் கொண்டு உன்னிடம் குறையிரந்து வேண்டுகிறார்.

நீ, உடம்பின் ஐந்து இன்றியமையாத பூதங்களை சேர்த்துள்ளாய். அவற்றைக் கடுமையாக தாக்குவதற்கு தன்முனைப்பான ஆங்காரப் பேயை அதனுள் அடைத்து வைத்துள்ளாய். 'நான்' 'எனது' என்பதனால் அங்கு என்ன பலன் வரப்போகிறது? யார் இந்த சுமையைத் தாங்கிக்கொள்ள முடியும்? எப்படி உடம்பினுள் இருந்துகொண்டு தூய ஆனந்தத்தைப் பெறமுடியும்? அதுவே மரணத்திற்கு ஒரு இரையாக இருக்கிறது. ஆத்மா அழியாதது; அது தனது பழைய உடலை விட்டு நீங்கி ஒரு புதிய உடலில் நுழைகிறது; தனது பாவ புண்ணிய இருப்பின் பிரகாரம் அது நல்ல அல்லது கெட்ட வாழ்வில் பிரவேசிக்கிறது. உலகத்தின் பரவிப்படரும் கொடியானது ஆசையினால் வளருகிறது;

அதனின் வளர்ச்சியை நாம் நிறுத்த வேண்டும்; இது உண்மை ஞானமாகும்.

துகா சொல்கிறார், ஒரு மறைந்துள்ள புதையல், மிக அதிகமாக மதிக்கப்படுகிறது. ஓ சகோதரனே, கங்கை நதியின் நீர் சாதாரணநீர் அல்ல, ஆலமரமும் அரசமரமும் வெறும் மரங்கள் அல்ல, துளசிமணி மாலையும், ருத்திராக்கமாலையும் கழுத்திலணியும் சாதாரண ஆபரணங்களல்ல, அவை கடவுளின் அம்சமாகும் கடல் ஆனது, ஒரு வாய்க்கால் அல்ல, நீ சிவலிங்கத்தை ஒரு கல் என்று அழைக்கக் கூடாது. சாதுக்கள், சாதாரண உலகமக்கள் போன்றவர்கள் அல்ல; நீ, துறவியின் கையிலுள்ள தண்டத்தை ஒரு மூங்கில் பிரம்பு என்று அழைக்கக்கூடாது; புனிதமானபிரசாதத்தை சாதம் என்று அழைக்கக் கூடாது. நீ 'ராமா-ராமா' என்பதை சாதாரண உரையாடலில் வரும் சொற்கள் என்று சொல்லக்கூடாது. சூரியனும், சந்திரனும் வெறும் நட்சத்திரங்கள் அல்ல; மேரு ஒரு மலை அல்ல, சிவன்மேல் உள்ளபாம்பும், வாசுகி என்னும் பாம்பும், வெறும் விஷப்பாம்புகள் அல்ல, கருடன் ஒரு பறவை அல்ல, சிவனின் காளை வாகனம் ஒரு கால்நடைப் பிரானி அல்ல, கற்பக மரம் ஒரு சாதாரண மரம் அல்ல, காமதேனு ஒரு பசு அல்ல, மந்தரமலையைத் தாங்கிய கூர்மம் ஒரு குளத்து ஆமையைவிட பன்மடங்கு உயர்ந்தது. வராகம் ஒரு காட்டுப் பன்றியல்ல, பிரம்மம், மனிதனின் ஆன்மாவைவிடப் பன்மடங்கு உயர்ந்தது. லட்சுமி வெறும் பெண் அல்ல, புனிதநீர் தெளிக்கும் கொம்பு வெறும் எலும்பு அல்ல, தேவதையின் பட்டாடை ஒரு துண்டு ஆடை அல்ல, பரிசமணி ஒரு கல் அல்ல; அது தேவதையின் அம்சம் தங்கம் ஒரு சாதாரண உலோகம் அல்ல, உப்பு ஒருவித மண் அல்ல, துறவியின் மான்தோல், புலித்தோல் ஆகியவை சாதாரண தோல்கள் அல்ல, முத்துக்கள் வெறும் கண்ணாடிக்கற்கள் அல்ல, வைரங்கள் கூழாங்கற்கள் அல்ல, நீ விருப்பப்பட்டப்போது வெளியே துரத்துவதற்கு ஆத்மா ஒரு விருந்தாளி அல்ல, துவாரகை என்பது வெறும் கிராமம் அல்ல, கிருஷ்ணனின் சிலை வெறும் கற்சிலை அல்ல, கோமதி என்பது ஒரு சாதாரண யாத்திரைத்தலம் அல்ல; அவற்றின் தரிசனமும், முத்தியை அளிக்கவல்லது; கிருஷ்ணன் வெறும் சுகத்தைவிரும்பும் போகிஅல்ல, சிவன் சுகம் இல்லாத ஒரு யோகி அல்ல.

துகா சொல்கிறார்- மேற்கூறிய பொருள்கள் எல்லாம் சேர்ந்து தரவல்ல ஆனந்தத்தை, பாண்டுரங்கனிடம் மட்டுமேதுகா பெற்றுக் கொண்டார்.

விட்டலன் பண்டரிபுரத்தில் பீமநதியோரத்தில் வாழ்கிறான்; தனது பக்கத்தில் புண்டலீகனை வைத்திருக்கிறான், அவன் கருணை மிக்கவன் நீ, அவனை நினைவில் வைத்திருந்தால் அவன் உனக்கு மிகவும் மென்மையானவன்; அவன் மிக உயரத்தில் உள்ளான். அவன் எல்லா உலகங்களையும் காக்கிறான், அதனால் பலவடிவங்களை எடுத்துக் கொள்கிறான். அவன் நேராக நிமிர்ந்து நிற்கிறான். ஆனாலும் அவன் எவ்வித வருத்தமும் உணரவில்லை. அவனைத் தவிர வேறு காக்கும் தெய்வம் இல்லை. ஒரு பணக்கார மனிதன் தன் வீட்டில் ஒரே வகையான உணவினை வைத்துக்கொண்டு நலிந்தவர்களுக்கு ஒவ்வொரு கணமும் பசியாற உணவளிக்கிறார். அவரது சேவகர்கள், தக்க மரியாதையுடன் ருசிமிக்க உணவினைக் கொண்டு வரும் போது, அவர்களிடமிருந்து அவர் ஒதுங்கி நிற்கமாட்டார். உயர்ந்தவர்கள் நடுவில் பாண்டுரங்க விட்டலன் உயர்ந்தவன், தாழ்ந்தவர்கள் நடுவில் அவன்தாழ்நதவன், நீ உனது கண்களை ஒரு கணம் மூடினால் அவன் மனதில் முன்பு வந்து இதயத்தில் வாழ்ந்து, உனது தேவைகளை உனக்கு வழங்குவதற்குரிய சந்தர்ப்பத்தைக்குறிக்கொள்கிறான். தாய் தனது குழந்தைக்குப் பாலூட்ட ஆயத்தமாகும் போது, அவள் ஒவ்வொருமார்பகமும் நிரம்ப வைத்துள்ளாள், எதுவும் காலியாக வைத்திருப்பதில்லை, குழந்தைகளாகிய நாம், பால் தயாராக இருக்கும் போது, உறிஞ்சிக்கொண்டே இருப்போம்; இப்படியாக ஜீவாத்மா, பரமாத்மாவுடன் ஐக்கியமாகிறது என்று துகா சொல்கிறார்.

உலகபாரத்தை சுமக்கும் ஒரு கழுதையாக, ஒரு அடிமையாக உன்னை நீயே ஆக்கிக் கொள்வது ஏன்? இனிப்புப்பதார்த்தங்கள் நாக்கு நுனியில் இன்பத்தை ஏற்படுத்தும். ஆனால் வயிறு நிரம்பிய போது அவை தங்களின் ருசியை இழக்கின்றன. ஒவ்வொரு அங்கத்திடமிருந்து புலனின்பங்களை நீ அடுக்கிக்கொண்டே போனாலும், அவை வந்து போகும், உன்னிடம் வந்துபோன சுவட்டை விட்டு வைக்காது. பாண்டுரங்க விட்டலனின் உருவத்தை, வைத்தகண் வாங்காமல் நீ திருப்தியடையும் வரை நோக்கினால் நீ . ஆசை என்னும் தாகத்தை மேலும் உணரமாட்டாய்.

துகா சொல்கிறார்-

எவை அழிந்து போகக்கூடிய பொருள்களோ அவற்றை அடைவதற்காக ஏன் இறைவனிடமிருந்து உன்னை நீயே பிரித்துக் கொள்கிறாய்.

அழகானது அவள் இனிய வதனம்; நளினமானது, இனிமையானது அவளது காதில் உள்ள குழைகள். படமெடுத்த நாகம் அவளது கூந்தல் கற்றைகளில் சுற்றிக் கொண்டுள்ளது. அவளது நெற்றியில் கஸ்தூரியும் சந்தனமும் பூசப்பட்டுள்ளது. அவளது கண்கள் பெரிதாகவும் கனமாகவும உள்ளன. அவளது கழுத்தில் காட்டுப் பூக்களின் கொத்து மின்னுகிறது. அவளது இடுப்பிலுள்ள துணி, பட்டினால் ஆனது; அவளது கண்ணுக்கினிய உருவத்தின் மீது சந்தனம் குழைக்கப்பட்டுள்ளது; அவளது எல்லா நளினங்களும் வெளிப்பட்டுத் துலங்க, எனது பாடலுக்காக வந்திருக்கிறாள். ராஜ கம்பீரம் பிரகாசிக்க அவளது மதிப்புமிக்க ஆபரணத்தை அணிந்துகொண்டு எனது அன்பிற்குரிய தலைவி வருகிறாள். அவள்முன்பு, கோடானு கோடி சூரிய சந்திர பிரகாசங்களும் மங்கி மறைந்துவிடும். பிரம்மனும் ஏனையோரும், அவளது உவமையில்லா பல்வேறு தோற்றங்களை அளக்கமுடியாது. அவளது மென்முக வண்ணம் செவ்விள நீளமாகும். அவளது நான்கு இனிய தோள்கள் வெண்ணிறமாகும். அவளது மார்பகம் ஆழமானது, அங்கு ஒரு அழகிய குத்தூசி ஜொலிக்கிறது; அவளது இடுப்பில், இனிய இசை எழுப்பும் சிறு மணிகள்கட்டப்பட்டுள்ளன. அவளது கால்களில் கொலுசுகள் இனிய ஒசை எழுப்புகின்றன; அவள் நமக்கு புதுமையான இசை, நடனம் ஆகியவற்றை செய்கிறாள். அவள் தனது எட்டு அங்கங்களில் இனிமையாக உள்ளாள். நாம் அவளது வடிவான உருவத்தை போற்றுவோம் அது, அழகு மற்றும் நறுமணத்தின் சுரங்கம் ஆகும். அவள் எல்லாத் திறமைகளையும் பெற்றுள்ளாள்; அவள் புன்னகைபுரியும் இதழ்விரித்து இனியகுரலில் பேசுகிறாள். அவள் பல வடிவங்களை எடுத்துக்கொள்கிறாள். அவள் தான் நாராயணா என்னும் மூல தேவதை. அவளது அரங்கேற்ற சடங்குகள் பண்டரிபுரமென்னும் உயர்ந்தநகரத்தில் கொண்டாடப்பட்டது. அவளது மேல் விரிப்பு, ஆகாயத்தில் மூன்றடுக்கு மாடிமேல் உண்டாக்கப்பட்டது. அவள் தனது பாடலை, சந்திரபாகா நதிக்கரையில் தொடங்கியிருக்கிறாள். நமது தலைவி, கிருஷ்ணா, யோகிகளின் ராணி, நமது பக்திக்கு கைமாறு செலுத்த அவள் வந்திருக்கிறாள். அவளுடன் முப்பத்து முக்கோடி தேவர்களும் சாமுண்டியும், எட்டு கோடி பைரவர்களும் உள்ளனர். அவளைச் சுற்றி

தீபங்களால் ஆரத்தி எடுக்கப்படுகிறது. அவர்கள் அவள்மீது பூமாரி பெய்கின்றனர். வீணையையும், மத்தளத்தையும் ஏந்தியவர்கள் இசைமுழக்குகிறார்கள்; கந்தர்வர்கள் பிரம்மானந்தத்தைக் காண்பிக் கிறார்கள். துகாவின் சகோரர் அவளது கால்களில் உள்ள துகளை மதித்து அணிந்து கொள்கிறார்.

(தொடரும்....)

# நவரச சம்பு ராமாயண நாடகம்

- அமரர்புக்குளம் பொன்னுசாமிக்கவிஞர்

### ராமர் வசனம்

முனிவரே, நாங்கள் தந்தைதாயிடம் விடை பெற்றுவந்தோம், இனிமேல் எங்கு செல்லவேண்டும். வழியை காண்பித்து முன்னதாக செல்லுவீர். நாங்கள் பின்பற்றி வருகிறோம்.

### விஸ்வாமித்திரர் பாட்டு

வழியிது தான் ராமனே- வல்லபூ மானே
வழியிது தான் ராமனே
தயைகுணலோலனே-தசரதர்பாலனே
தழைதுளிரடர்ந்தவனம்-எழிலுள்ளமலரின் மணம் (வழியிதுதான்....)

### விஸ் வசனம்

ராமா நான் போகும் வழியாகவே வாருங்கள்

### ராமர் பாட்டு

வல்ல முனிநாதரே-துரிதமாக
வந்தோம் வெகுதூரமே
புல்லும் செடியில்லா பூமியிருப்பதென்ன
சொல்லும் நானறிந்திட சுவாமியே ஏதுவோம்.

### ராமர் வசனம்

சுவாமி நாம் எவ்வளவோ தூரம் வந்தோம். அங்கெல்லாம் செடி கொடிகள் தழைத்தோங்கி இருந்தது. இந்த இடம் மட்டில் பட்டு போன செடிகொடிகள் தானே தெரிகிறது. என்ன காரணம் தெரிவிப்பீர்.

### விஸ்வாமித்திரர் பாட்டு

ஈசன் தபமிருக்க-மதன் எதிரில்
ஏகி கணை தொடுக்க
நேசமில்லாதசிவன்-நெற்றிக் கண்ணைத்திறக்க
நேரினில் காமன் எரிந்த பூமியிது சுடுமண், (ஈசன்...)

### விஸ் வசனம்

கயிலாயமே கோவிலாக வீற்றிருக்கக்கூடிய கடவுளானவர் இந்த இடத்தில் தபம் செய்தபோது தேவ லோகத்தில் தேவேந்திரன் பார்த்து-ஈஸ்வரர் அரிதாகிய தபம் செய்கிறார் அந்த தபத்தை கலைக்க வேண்டுமென்று ஆலோசனை செய்து மன்மதனை அனுப்பினார்கள். மன்மதன் அவர் தபம் செய்யும் இடத்தில் வந்து மன்மத பாணம் மீட்டினான். அவர்நெற்றிக்கண்ணைத் திறந்து பார்த்த போது எரிந்தான் மன்மதன். அந்த சுடு மண்தான் இந்த இடம் ராமா,

### அந்த சமயம் தாடகை வருவது
### தாடகை விருத்தம்

பிடிபடா கரியைக் கண்ட புலியது போல் குதித்து
இடியெனவே கெர்ஜித்து ஈடில்லா வலிமை கொண்ட
கெடிகொள்தாடகையும் நானே கெதையொரு கையில்கொண்டு
கொடிய கானகத்தில் துஷ்ட்டி கூவியே வநகிறேனே.

### தாடகை பாட்டு

கௌசிகனும் அதோ வருகிறான்-என்னைச்
கண்டால் செடியில் ஓடி மறைகிறான்
அவசியம் அவனைநான் அலங்கோலம் செய்கிறேன்
ஆரோ இருவர் வாரார் நேரில் போய் அறிகிறேன்

### தாடகை வசனம்

அடே விஸ்வாமித்திரா உன்னை இதுநாள் பரியந்தம் விட்டிருப்பதால் நீ அஞ்சாமல் இந்த காட்டில் இருந்து வருகிறாய். அதை விடவும் இன்று இரண்டு பஞ்சப் பயல்களை கூட்டி வந்திருக்கிறாய். நல்ல உணவுதான் கொண்டு வந்தாய். இன்று கொண்டு வந்ததைப் போல் தினந்தோறும் என்பசிக்கு இரண்டு பிள்ளைகளை அழைத்து வருவாய். உன்னை விட்டு விடுகிறேன்.

### தாடகை பாட்டு

அடடா விஸ்வாமித்ரா நில்லடா-இவர்கள் யார் பெற்ற பிள்ளையோ சொல்லடா திடுதிடென்றோடாதே சிறுவர்பின் மறையாதே தெண்டாலுனை யடித்தே உண்டிடுவேன் பசிககே

### தாடகை வசனம்

அடே விஸ்வாமித்ரா, இந்த அறியாப்பிள்ளைகள் யார் பெற்ற பிள்ளைகளோ என்பசி வேளைக்கு கொண்டு வந்திருக்கிறாய். நல்ல வேளை.

### தாடகை பாட்டு

அறியாத பாலரைக் கூட்டியே-வந்தாய்
யாகம் செய்ய வென்றே கூட்டியே
ஒரு போதும் புகை மூட்ட உடந்தனாலாகுமோ
ஒகோ உனை இன்று நோக செய்வேன் கண்டாய்

### தாடகை வசனம்

ஆனால் இன்று அறியாத குழந்தைகளை கூட்டி வந்து யாகம் செய்யலாமென்று வந்திருக்கிறாய். அதுதான் உன்னால் முடியாது.

### தாடகை பாட்டு

துணைக் கூட்டி வந்தாலும் வாட்டுவேன்-உன்னை
தும்சம் செய்து எமபுரம் ஓட்டு வேன்
கணையும் சிலையும் நேரே கண்டால் பயப்படுவேனோ
காட்டியே மாயையால்-வாட்டுவேன் உங்களை

### தாடகை வசனம்

அடே விஸ்வாமித்ரா! உனக்கு துணையாக இந்த குழந்தைகளை கொண்டு வந்திருக்கிறாய். அவர்களைத் தின்று உன்னையும் எமபுரம் அனுப்புகிறேன்.

### விஸ் விருத்தம்

மன்னனே ராமச் சந்தரா மாபாவி குதிக்கக் கண்டேன்
இன்னமும் கணைதொடாமல் இருப்பதை அறிகிலேனே.

### ராமர் விருத்தம்

உன்னித முனியே பாணம் ஒருவர் மேல் தொடுத்ததில்லை
பெண்ணிவள் எனயோசித்து பார்க்கிறேன் இது நேரம் தான்

### விஸ் வசனம்

ராமச்சந்திரா தாடகை வந்து எவ்வளவோ நேரமாகி விட்டது நீ யேன் கணை தொடாமல் நிற்கிறாய்

### ராமர் வசனம்

முனிவரே நான் இதுவரையில் ஒருவர்மேல் பாணப் பிரயோகம் செய்ததில்லை. அதிலும் இவள் பெண்ணாக இருப்பதால் சற்று யோசனை செய்தேன்.

### ராமர் பாட்டு

முன்னம் பாணப்பிர யோகம்-இந்த
　　பெண்மீதி லெய்திடி லோவெகு பாபம் (முன்னம்..)
முனிவரே நான் இது காலம்
　　இனியவில்தனில் ஒரு பாணம்
முந்திநான் எய்ததும் இலையே
　　வந்துதே வீண்பழி தொல்லையே (முன்னம்..)
முனைவீரரிதை யறிந்திடிலோ
　　எனையிகழ்வாரது கெடிலே
மூர்க்கியான போதும் மாதை
　　ஆக்கினைசெய்யத்தகாதே (முன்னம்...)

### ராமர் வசனம்

முனிவரே என்னைப்போல் வீரனிடம் போர் புரிந்து ஜெயித்தால் எனக்கு புகழ் உண்டாகும். கேவலம் ஒரு பெண்ணை கொலை செய்தால் எனக்கு ஒரு புகழும் கிடைக்காது. ஆகையால் யோசனை செய்து நின்று விட்டேன் சுவாமி. மேலும்,

### ராமர் பாட்டு

பெண்ணென்றால் பூமியில் பேயுமிரங்கும்
பெருமையாலே தியங்குதே யங்கம்
விண்ணில் எதிர்த் தோரை வெல்வதே சிங்கம்
வெய்யவன் தன் குலமதிலோ
அய்யோ பழி செய்திடிலோ (முன்னம்)

### ராமர் வசனம்

சுவாமி பெண் என்றால் பேயும் மனமிரங்கும் ஆகையால் முதல் முதலாக ஒரு பெண்ணை வதை செய்தால் கேவலமாக நினைப்பார்கள் மேலும்.

### ராமர் வசனம்

வில்லுக்கிவளே எதிர் நிற்கப்போமோ
வெல்லலாகா தென சொல்லவுமாமோ
அல்லதிவளாலே அச்சமுண்டாமோ
அவசரமே படுகிறீரே
தவசியே நீர் கலங்குறீரே (முன்னம்...)

### ராமர் வசனம்

சுவாமி. இந்த நாடகையானவள் ஒரு பாணத்தில் மடிந்து விடுவாள்.பெண்ணாக இருக்கிறாள் என்று தான் யோசனை. ஏன் என்றால் நான் பிறந்ததிலிருந்து யார்மீது பாணப்பிரயோகம் செய்யவில்லை. இதுதான் முதல் முறை ஆகவே முதல் பலியாக பெண்ணை கொலை செய்யக் கூடாது என்று தான் நின்று விட்டேன்.

# த்வைத மதம்

புரோஹிதம் K.V. நரசிம்மாச்சார்
கோட்டை, கோயமுத்தூர்

'ஸீகமேவ மேஸ்யாத் து:க்கம் மனாகபி மாபூத்' என்றவாறு உலகில் பிறந்த எல்லா ஜீவராசிகளும் தங்களுக்கு எப்போதும் ஸீகமேஇருக்கவேண்டும் துக்கமே இருக்கக் கூடாது என்று நினைக்கிறார் கள். இது ஸஹஜம். ஆனால் யாரும் தங்களின் ஸீகத்திற்கான வழியை நாடுவதில்லை. துக்கத்தை நீக்கிக் கொள்ளவும் பாடுபடுவதில்லை. இவ்வாறு உள்ளது இந்த உலகம். ஸீகம் என்பது துக்கமே கலவாததாக இருக்கக்கூடியது மோக்ஷம் என்பதில் தான் உண்டு. மோக்ஷம் என்றால் விடுதலை. சம்ஸாரத்தினின்றோ அல்லது ஜனனமரணங்களிலிருந்தோ விடுதலை அடைவது தான் மோக்ஷம். இந்த மோக்ஷம் என்ற ஸீகம் எல்லா ஜீவராசிகளுக்கும் பொதுவானது. இதை அடைய வேண்டுமானால் பகவான் ஸ்ரீ விஸ்ணுவின் அனுக்ரஹத்தை அடைய முயற்சித்தல் வேண்டும். பகவான் ஸ்ரீ விஷ்ணுவின் அனுக்ரஹத்தை அடைய வேண்டுமானால் அவனிடம் பக்தியைச் செய்ய வேண்டும். பக்தி என்று சொல்லும் போது அதற்கு இலக்கணமாக

'மாஹாத்ம்ய க்ஞான பூர்வஸ்து ஸீத்ருடஸ் ஸர்வதோதிக:
ஸ்நேஹேத பக்திரிதிப்ரோக்த : தயாமுக்திர் நசான்யதா ' என்று
கூறப்படுகிறது.

பகவானுடைய எண்ணிக்கையற்ற கல்யாண குணங்களைப் பெரியோர்களின் மூலமாகக் கேட்டு, அதை நம் மனதில் சதா சிந்திக்க வேண்டும். இவ்வாறு செய்யும் போது பகவான் ஸ்ரீ விஷ்ணு ஒருவனே ஸ்வதந்திரன் மற்ற எல்லாரும் அஸ்வதந்திரர்கள் என்றும், பகவானுடைய இஷ்டத்தின்படி தான் உலகில் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன என்றும், த்ருடமாக தெரிந்த கொண்டு அவனைத் தவிர மற்ற யாரும் அவனுக்குச் சமானமானவர் இல்லை என்றும் தெரிந்து கொண்டு அவனை நாம் எல்லா விதத்தாலும் அறுபடாத ஸ்நேகத்தை செய்வோமானால் அவன் அனுக்ரஹம் நிச்சயம் ஏற்படும் என்று தெரிந்து கொள்ள வேண்டும். ஸ்நேகத்திற்கு தான் பக்தி என்ற பெயர்.

பக்தி என்ற நெறியைப் பல சமயாசார்யார்கள் தங்களுடைய சிஷ்யவர்கத்திற்கு போதித்து இருக்கிறார்கள். அவைகளை அவரவர்களுடைய சிஷ்யர்கள் கடைப்பிடித்து வருகிறார்கள். இவ்வாறு வந்துள்ள மத ப்ரவர்த்தகர்களில் கடைசியாக வந்தவர் ஸ்ரீமன் மத்வாசார்யார் ஆவார். அவர் 13 ஆம் நூற்றாண்டில் பாகவதோத்தமரான மத்யகேஹ பட்டரிடம் அவதரித்தவர். ஸ்ரீமன் மத்வாசார்யாரைப்பற்றி சில வார்த்தைகள் கூற வேண்டுமானால், அவர் வாயுபகவான். அவர் பகவானுடைய உத்தரவின்படி மூன்று முறை அவதரித்தவர். முதலில் பகவானுடைய ஸ்ரீராமாவதார காலத்தில் அஞ்ஜனா தேவியிடம் ஸ்ரீ ஆஞ்ஜநேயர் என்ற பெயருடன் அவதரித்து ஸ்ரீராமச்சந்திரன் ஸம்பூர்ணமான ஸேவைகளைச் செய்த 'ஸஹபோகம்' என்ற பதவியைப்பெற்ற இன்றும் கிம்புருஷ கண்டத்தில் ஸ்ரீ ராம நாம ஜபம் செய்து கொண்டு வசித்து வருகிறார். இன்னும் ஸ்ரீ க்ருஷ்ணாவதார காலத்தில் பீமஸேனர் என்ற பெயருடன் அவதரித்து பகவான் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய ஸம்பூர்ணமான ஸேவைகளை செய்து ஸ்ரீ க்ருஷ்ணனின் அனுக்ரத்தை அடைந்தார். மூன்றாவது முறையாக பகவா-னுடைய உத்தரவின்படி கலியுகத்தில் உடுப்பிக்குப் பக்கத்திலுள்ள பாஜக க்ஷேத்திரத்தில் வசித்திருந்தவரான மத்ய கேஹபட்டர்-ஸத்யவதி என்ற தம்பதிகளுக்கு வாஸீதேவன் என்ற பெயரால் அவதரித்து, சிறுவயதில் பல ஆச்சரியகரமான காரியங்களைச் செய்வித்ததின் மூலமாக தம்முடைய தேவதாஸ்வபதத்தை காட்டினார். பால்யத்திலேயே ஸ்ரீ அச்யுதப்ரேக்ஷ் தீர்த்தரிடம் இயற்றினார். இன்னும் தம்முடைய தேச தஞ்சார காலத்தில் பல மாயாவாதிகளை வாதத்தினால் வென்றார். தம்முடைய த்வைத ஸித்தாந்தத்தைத் தமது சிஷ்யர்களுக்கும் மற்றவர்களுக்கும் போதிக்கும் போது சிஷ்யர்களுக்கு எந்த விதத்திலும் ஒரு சிறு சந்தேகமும் தோன்றாவாறு சாஸ்திரங்களை இயற்றினார். இவ்வாறு அவர் தமது 78 ஆம் வயது வரை ஜனங்களுடன் பழகி அவர்களை நல்வழிபடுத்தி பிறகு பகவான் வேதவ்யாஸரின் உத்திரவின்படி பதரிகாச்ரமம் சென்று அங்கு பகவான் தேதவ்யாஸரிடம் பாடப்ரவசனங்களை இன்றும் செய்து கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ மன் மத்வாசார்யா (இவரது மூலரூபம் வாயு) வேத ப்ரதிபாத்யரானவா. பகவான் ஸ்ரீ விஷ்ணுவினிடம் அனன்யமான பக்தியைச் செய்கிறவர். உபநிஷத்துக்களிலும், பல புராணங்களிலும் இவர் மஹிமைகள் கூறப்பட்டிருக்கின்றன. இவருடைய தத்வ மதம்

(தத்வம்=ஸத்யம்) போற்றத்தக்கது. இவருடைய கோட்பாடுகள் 9 வகைப்படும். அவைகள்:

1. பகவான் ஸ்ரீ விஷ்ணு. இவர் ஒருவரே தெய்வம். லக்ஷ்மிதேவி சதுர்முக பிரம்மன் போன்ற எல்லா தேவதைகளும் விஷ்ணுவின் கிங்கரர்கள் ஆவார்கள். பகவான் ஸ்ரீ விஷ்ணுவினுடைய அனுக்ரஹ விசேஷ பலத்தால் மோக்ஷத்தை அடையக்கூடியவர்கள். பகவான் ஸ்ரீ விஷ்ணுவினிடம் நித்ய முக்தளான லக்ஷ்மி தேவியாரும், சதுர்முகபிரஹம்ன் அவர் மனைவி ஸரஸ்வதி தேவியாரும், வாயுபகவான் அவர் மனைவி பாரதீ தேவியாரும் எந்தக் காலத்திலும் ஒரு சிறு அபராதம் கூட செய்யாதவர்கள். ஆகவே இந்த 5 பேரும் பரசுக்லம் என்ற வர்கத்தை சேர்ந்தவர்கள். பகவான் ஸ்ரீ விஷ்ணுவோ அனந்த கல்யாண குணங்களைக் கொண்டவன். சிறுதோஷமும் கூட இல்லாதவன். ஸ்வதந்திரன், முக்காலத்தையும் அறிந்தவன்.சாஸ்திரங்கள் வேதங்கள் இவைகளைத்தவிர மற்ற வகையால் யாராலும் தெரிந்து கொள்ள முடியாதவன். பராக்ரமசாலி, தன் ஸங்கல்ப இஷ்டத்தின்படி காரியம் செய்கிறவன். செய்விக்கிறவன். ஆகியவைகள் இன்னும் பல.

1. லக்ஷ்மீதேவியார் பகவான் ஸ்ரீ விஷ்ணுவின் மனைவி.

2. ஜகத்து ஸத்யம். நாம் கண்ணால் காணும் உலகம் ஸத்யமானது. என்றும் அழிவதே இல்லை. (மாறுபடலாம்)

3. பாரம்பரியமாகவே ஒருவருக்கொருர் ஒன்றுக்கொன்று பேதம் (வித்யாஸம்) உடையதாக இருக்கிறது. எந்த 2 வஸ்துக்களையும் ஒன்றென்று சொல்ல முடியாது. ஏதாவது ஒரு விஷயத்தில் இருவஸ்துக்களிடையே பேதமிருக்கிறது.

4. உலகின்கண் பிறந்த ஜீவர்கள் பகவான் ஸ்ரீ விஷ்ணுவை ஆச்ரயித்தவர்கள். அவ்வாறு ஆச்ரயித்து அவனைப் போற்றினால் அவன் கருணையினால் மேலோங்குகிறான்.

5. அந்த ஜீவர்களிடையேயும் பேதம் உண்டு. ஜீவர்களின் உத்தமன் மத்யமன் அதமன் என்று மூன்று வகையுண்டு

6.

5. அந்த ஜீவர்களிடையேயும் பேதம் உண்டு. ஜீவர்களின் உத்தமன் மத்யமன் அதமன் என்று மூன்று வகையுண்டு

6. மோக்ஷத்தில் ஜீவர்கள் தங்கள் தங்கள் ஸ்வரூபத்தினால் செய்த புண்ய பாவங்களின் பலனை ஸம்பூர்ணமாக அடைகிறார்கள். மோக்ஷமும் 3 விதமாக உள்ளது. 1 ஸீக ஸ்வரூபமானது. (2) ஸீகதுஃக்க ஸ்வரூபமானது. (3) துக்க ஸ்வரூபமானது என்று.

7. மோக்ஷத்தை அடைய பகவானிடம் நிர்மலமான பக்தி ஒன்றே காரணமாகும். பக்தியற்றவன் ஸீகஸ்வரூபமான மோக்ஷத்தை அடையவே முடியாது.

8. மோக்ஷத்தை அடைய பகவானிடம் நிர்மலமான பக்தி ஒன்றே காரணமாகும். பக்தியற்றவன் ஸீகஸ்வரூபமான மோக்ஷத்தை அடையவே முடியாது.

9. சாஸ்திரங்கள் வேதங்கள் இவை ப்ரமாணமானது. வேதங்களுக்குப் புறம்பான பிரமாண வாக்யங்கள் உபயோக மில்லை. இவ்வாறு சாஸ்திரங்களின் முக்ய கருத்துக்களை நன்றாகத் தெரிந்து கொள்வதே மோக்ஷ உபாயமாகும்.

பகவானிடம் பக்தியைச் செய்வதில் நமக்கு சௌகரியமாக இருக்குமாறு 9 படிகள் இருக்கின்றன.

'ச்ரவணம், கீர்தனம் விஷ்ணோ; ஸ்மரணம் பாதஸேவனம் அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம் சக்யம், ஆத்மநிவேதனம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தம் பகவானுடைய அனந்தமான கல்யாண குணங்களை ஸதா கேட்டு ஆனந்திப்பது. தன் காதால் கேட்ட குணங்களைத் தன் வாயால் சொல்லிச் சொல்லி மகிழ்வது. பகவான் விஷ்ணுவை ஸதா அவனுடைய அநேக அவதாரங்களை மனதில் தெரிந்து கொண்டு சிந்திப்பது. பகவான் ஸ்ரீ விஷ்ணுவை அடிபணிவது, பகவான் ஸ்ரீ விஷ்ணுவை பூஜிப்பது. பகவான் ஸ்ரீ விஷ்ணுவை நமஸ்கரிப்பது. பகவான் ஸ்ரீ விஷ்ணுவினிடம் தாஸன் என்று திகழ்வது. பகவான் ஸ்ரீ விஷ்ணுவையே ஸ்நேகிப்பது. பகவான் ஸ்ரீ விஷ்ணுவிற்கு தன்னையே அர்ப்பணம் செய்து கொள்வது ஆகியவைகள் ஆகும்.

ஸ்ரீமன் மத்வாசார்யாரின் சிஷ்ய பரம்பரையில் அநேக தேவதைகள் பகவானுடைய உத்தரவைக்கொண்டு பூலோகத்தில் பிறந்து ஸன்யாஸம் ஏற்று மத்வதசார்யாரின் நூல்களுக்கு டீகா டிப்பணிகளை (உரை நடை-களை) எழுதியுள்ளார்கள் அவர்களில் முக்யமானவர்கள் ஸ்ரீ ஜயதிர்த்தர், ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ வ்யாஸராஜர், ஸ்ரீ ரகூத்தமர், ஸ்ரீ விஜயீந்திரர், ஸ்ரீ ராகவேந்திரர் போன்ற அனேகம் பேர். அவர்கள் எழுதியுள்ள டீகா டிப்பணிகளை வாசிக்கும் போது மெய்மறக்க உடல் சிலிர்க்க ஆனந்தபாஷ்பம் பொங்குகறது.

இப்பேர்பட்ட மஹனீயர்களில் ஒருவரான ஸ்ரீ மத்ராகவேந்திர தீர்த்த ஸ்ரீ பாதங்களவர்கள் தாம் எழுதிய நூல்களிலிருந்து சில பாகங்கள் சிந்தனைக்காக கொடுக்கப் பட்டிருக்கின்றன.

வேதத்தின் அஸ் ,திவாரத்தின் மேல் மத்வ சாஸ்திர மாளிகை கட்டப்பட்டிருக்கிறது. தனது அறிவுக்கு எட்டாததைச் சிலர் பொய் என்று சொல்லித் தள்ளி விடுகிறார்கள். அவர்கள் விஷயத்தை முதலிலிருந்து கூர்மையாக சுற்றுக்கொள்ள வேண்டும்.

சிலர் சாஸ்திர விஷயங்களை முட்டாள் தனமானது என்று சாதிக்கக்கூடும். ஆனால் பௌதிக சாஸ்திரங்களைக் கற்றவர்கள் இந்த விஷயத்தில் நன்றாக ஆராய்ச்சி செய்து அதனால் அனந்த கல்யாண குணபரிபூர்ணனான பகவான் என்ற பெயருடையவன் ஒருவன் இருப்பது ஸத்யமே; இந்த உலகமும் அவ்வாறே ஸத்தியத்தில் தான் நிலை நின்றிருக்கிறது என்கிறார்கள்

மேனாட்டு விஞ்ஞானிகளும் கூட பகவானுடைய விஷயத்தில் சிறந்த அறிவைக் கொண்டவர்கள் Have faith in God. Where there is faith there is love. Where there is love there is peace. Where there is peace there in no need. என்று குறிப்பிட்டிருப்பதை கவனிக்கலாம்.

மனிதனுடைய புத்த மிகச்சிறந்ததே. அதில் பகவானுடைய மு-ழுமையான குணங்களைத் திணிததுக் கொள்ள முடியாது. அவ்வாறே பகவானுடைய முழுமையான கல்யாண குணங்களை மனத்திலும் அடக்கி கொள்ள முடியாது. அவ்வாறே பகவானுடைய முழுமையான கல்யாண குணங்களை மனத்திலும் அடக்கி கொள்ள முடியாது. அழகிய ஆழாக்காக இருந்தாலும் உழக்கு அதற்குள் பிடிக்காது. பலசாலியான ஒரு மனிதன்

ஒரு பலகை மீது நின்று கொண்டு அந்தப் பலகையை எவ்வகையிலும் தூக்க முடியாது. என்றால் தனது அறிவு எல்லைக்குள் பகவானுடைய அனந்தமான கு ணங்களைச் சிந்தித்து மேலும் பகதவனுக்ரஹத்தை அடைய வேண்டுமே தவிர சிறிது கற்றக் கொண்ட உடன் தலை நிமிர்ந்து அஹங்காரப்படக்கூடாது. என்ற வகையில் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

பகவான் ஸ்ரீ விஷ்ணுவே தன் அவதாரங்களில் ஒன்றான வேதவ்யாஸர் என்ற பெயருடன் வேதங்களுக்குச் சரியான அர்த்தத்தை நிருபிப்பதற்காகக் கற்றறிந்து கொள்வதில் மிகவும் கஷ்டமுடையதான வேதங்களின் அர்த்த நிருபணமாக ஸ்ரீமன் மஹாபாரதத்தை இயற்றி அதன் மூலமாகப் பகவத்குணங்களை நிருபத்தார்.

யுதிஷ்டிரன் சாகும தருவாயிலுள்ள பீஷ்மாசார்யாரிடம் தர்மத்தைக் கேட்க, பீஷ்மாசார்யார் ஜகத்ப்ரபுவும் தேவதேவனுக்கு காலதேச வஸ்துக்களினால் அளவில்லாதவனும் அனந்த கல்யாண குணபூர்ணனாகவும் விளங்குபவன் ஸ்ரீ விஷ்ணுவே. அவனுடைய ஆயிரம் பிரகாசம் பொருந்திய பெயர்களில் எதைக் குறிப்பிட்டு பக்தியுடன் பாடினாலும் அவனை ஆராதித்தாலும் அவன் எம்மைக் காப்பான். அவன் ஸர்வோத்தமன், பிறப்பிறப்பில்லாதவன். நம் எண்ணத்தில் அடங்காதவன், நமது வாழ்நாளை அவன் ஸேவையில் ஈடுபடுத்துவதே நமது தலையாய கடமையாகும். அவன் எங்கும் வியாபித்தவன். ப்ரதயக்ஷ அனுமானங்களினால் அறிய முடியாதவன். எம்பெருமான் ஸ்ரீ விஷ்ணுவைத் துதிப்பதே உத்தமமான தர்மம். இவ்வாறு உபதேசித்ததையே மத்வாசார்யார் தமது ஸ்ரீமன் மஹாபாரத தாத்பர்யத்தில் கூறியிருக்கிறார். இந்த பகவான் ஸ்ரீ விஷ்ணுவிடம் அக்ஞானமாவது மற்றவர்க்கு அடங்குவது போன்ற எந்த விதமான தோஷமும் கிடையாது. ஜகத்தினுடைய படைத்தல், காத்தல், அழித்தல், அமர்த்துவது, அறிவைக் கொடுப்பது, அறிவைக் கெடுப்பது, கட்டுப் படுத்துவது, கட்டை விலக்குவது போன்ற எட்டு காரியங்களின் அதிகாரியாகிறான்.

தேவதைகளினால் பிரார்த்திக்கப்பட்ட பகவான் ஸ்ரீ விஷ்ணு ராமன் கிருஷ்ணன் என்று பல அவதாரங்களை எடுத்து உலகில் தர்மம் செழிக்கவும் அதர்மம் நீங்கவும் பக்தர்களை ஆட்கொண்டான்.

கீதையில் 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ: மத்த: ஸர்வம் ப்ரவர்ததே' என்று கண்ணன் கூறிது ஞாபகத்தில் இருக்க வேண்டும். இன்னும் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜீனனிடம் கூறும்போது தன்னைத்தவிர மற்றவர்களைப் பூஜிக்கும்படி சொல்லவில்லை. பகவானுடைய இப்பேர்பட்ட மஹிமைகள் இந்திரஜாலம் போன்றவைகள் அல்ல. ஸத்யமான ஸீகத்தையே கொடுக்ககூடியது.

ஸ்ரீமன் நாராயணனே பர தைவம் என்பதை 'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ரு மாத்ரு கதி:' என்று துவாதச ஸ்தோத்திரத்தின் மூலம் மத்வாசார்யார் கூறுகிறார். இனி அத்வைத விசிஷ்டாத்வைத த்வைத மதம் இவைகளின் கோட்பாடுகள் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அத்வைதம் இந்த மதத்தை ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசார்யார் தோற்றுவித்தார். அதில் காணும் சாராம்சம் இவ்வாறுள்ளது. ப்ரம்ஹ ஸத்யம்=சுத்த சைதன்யமே ஸத்யமானது. ஜகன் மித்யா=உலகம் பொய்யானது. ஜகத்ஸத்யம் என்று சொல்வது வ்யவஹாரிக ஸத்யம் (வ்யவஹாரத்திற்கு மட்டும் ஸத்யமானது) ப்ரம்ஹ ஜகத்து இரண்டும் அநிர்வசனீயம். (வார்த்தைகளால் கூறமுடியாது) அனாதி கால ஸம்பந்தத்தினால் ஜீவன் பிரம்மனிடனிமருந்து பிரிந்து அவித்யா (அறியாமையின்) காரணத்தினால் வேறாகிறான். ஜீவனுக்கு அஹம் ப்ரம்ஹாஸ்மி, ஆத்மா (அறியாமையின்) காரணத்தினால் வேறாகிறான். ஜீவனுக்கு அஹம் ப்ரம்ஹாஸ்மி, ஆத்மா தத்வமகி போன்ற வேத வாக்கியங்களின் உண்மை ஸ்வரூபம் தெரியும் போது ஜீவன ப்ரம்ஹனாகிறான். இதற்கு ஐக்ய பாவம் (ஒன்றுபடுதல்) காரணமாகும். பகவத் பிரஸாதம் என்பது ஜீவனுக்குப் பொருந்தாது. ஸம்ஸாரத்திலும் ஐக்யம் தான். ஆனால் அது தெரியவதில்லை. ப்ரம்ஹன் 'நிர்குணன். அவனிடம் எந்த விதமான குணமும் கிடையாது. ப்ரம்ஹன் சைதன்யன் ஞானதனந்த ஸ்வரூபமுடையவன் (அவனைப் பொருத்த மட்டிலும்) தர்மம் என்பது கிடையாது. நிராகாரமானதும் நிரவயவமானதும் ஆன அகண்ட வஸ்துவே பிரம்ஹன் ஆகும். இது ஒன்றே தத்வம், இவ்வாறுள்ள அத்வைத மத தத்வத்தை மத்வாசார்யார் கண்டித்து இருக்கிறார். விசிஷ்டாத்வைதமதம். இந்த மதத்தை ஸ்ரீ ராமானுஜர் தோற்றுவித்தார். இதிலும் தத்துவம் என்பது ஒன்றே. விசேஷணமான ஜீவனையும் ஜடத்தையும் முடையது. விசிஷ்டாத்வைதத்தில் 7 கொள்கைகள் முக்யமானது. அவை (1) ஸரீர ஸரீரி பாவம். (2) விசேஷண விசேஷ்ய

பாவம் (3) ஸேஷ ஸேஷீ பாவம் (4) அம்ஸாம்ஸி பாவம் (5) ஆதாதர அதேய பாவம் (6) நியந்த்ரு நியதபாவம் (7) ரக்ஷக ரக்ஷ்யபாவம் எனப்படும். மோக்ஷமடைவதற்கு நித்ய பகவத் கைங்கர்ய பாவத்தை விட வேறே எதுவுமில்லை. ஜீவன் பிரம்மாம்சம். புருஷஸீக்தத்தில் 'பாதோஸ்ய விச்வா பூதானி' என்பதில் பாதோஸ்ய என்பது பகாவனுடைய அவயவ அம்சம். இதே மாதிரி பகவத் கீதையில் 'மமௌவாம்சா' என்று கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும். உபாஸிக்கப்படும். தத்வம் சுத்தமாக இருக்க வேண்டும். இவைகளை உபதேசித்தார். இந்த விசிஷ்டாத்வைத மத வாதங்களை ஸ்ரீமன் மத்வாசார்யார் நிராகரித்து இருக்கிறார்.

ஸ்ரீ மன் மத்வாசார்யர் பகவானையும் பகவானைத்தவிர மற்றவர்களையும் இரண்டாக பிரித்து அதில் காணும் குண விசேஷங்களை சொல்லி பகவதனுக்ரஹமே மோக்ஷோபாயம் என்பதை நிதர்சனமாகவும் ஆக்ஷேபணைக்கே இடமில்லாத வாறும்ஸத்யமான வார்த்தைகளினால் கூறியிருக்கிறார். அதையே மற்ற அவர் பரம்பரா மதப்ரவர்த்தகர்களும் பின்பற்றியிருக்கிறார்கள். ஸ்ரீமன் மத்வாசார்யாரின் தத்வங்களை சிறந்த முறையில் கற்றுக்கொண்டவர்களுக்கு அதனுடைய ஆனந்த அனுபவம் கிடைக்கிறது.

ஆகவே ஜகத்ப்ரபுவான பகவான் ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் தத்வ தரிசனம் செய்வித்து தன் அனுக்ரஹத்தினால் கடைத்தேறச்செய்யட்டும் என்று பிரார்த்திப்போமாக.

## ஸ்ரீ ராமாயணம்

(ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் அருளிய ஸ்ரீ மகாபாரத தாத்பர்ய நிர்ணய பாவ ஸங்கிரகத்தில் இருந்து-3 முதர் 9 வரையுள்ள ஸ்லோகங்கள்)

ஆதென ரூப சதுஷ்டயீம் ஸ்ருஜதி யோ
தேவாந் புராநுகரமாத்
ப்ரஹ்மாண்டம் புரமப்ஜ ஜாதி விபுதான்
ஸ்ருஷ்ட்வா ஹரத்யந்ததஃ

ஸ்ரஷ்டா பூர்வ வதஸ்ய ஸர்வ ஜகதோ
மத்ஸ்யாதி ரூபோ பவன்
ராமோ அ பூதனுஜான்விதோ தஸரதாத்
பாயாத்ஸ நः ஸ்ரீபதி:॥

ஆதியில் வாசுதேவன் முதலாம் நான்கு ரூபத்தையுடைய எவர்(ஸ்ரீமன் நாராயணன்) முன் கல்பத்தை அனுசரித்து ப்ரம்மாதி தேவர்களையும், ப்ரம்மாண்டத்தையும், (சூட்சும ரூபமாக) ஸ்ரஷ்ப்பவராகி, பிறகு ப்ரம்மாதி தேவர்களை. (ஸ்தூல ரூபமாக) ஸ்ருஷ்டித்து முடிவில் (ப்ரளய காலத்தில்) நாசம் செய்பவ்ரோ முன்போலவே இந்த எல்லா உலகிற்கும் ஸ்ருஷ்டி கர்த்தாவான எவர், (ஸ்ரீ நாராயணன) மீன் முதலான அநேக ரூபங்களை எடுத்தாரோ, தசாதனால் தன் சகோதரர்களுடன் அவதரித்த அந்த ஸ்ரீ லட்சுமி பதியான ஸ்ரீ ராமர் நம்மைக் காப்பாற்றட்டும்.

யத் வ்ருத்திர் ஜனமோஹினி முதமிதா
யத் தர்ஸநாத் ஸஜ்ஜனத:
யேன ரிஷிப்ரிய காரிணா நிஸி சரீ
ஹந்த்ரா க்ரது ரக்ஷித: ,
யோ அஹல்யாம் ஸபதிம் வ்யதாத் ஹரதனுர்
பங்க்த்வா அவஹஜ் ஜானகீம்
ஜேதா வர்த்மனி பார்கவஸ்ய
நகரீம் ராமொகதோ அவ்யாத் ஸமாம் ॥

எவருடைய வளர்ச்சி ஜனங்களின் மனத்தை வசீகரித்ததோ, எவரைப் பார்ப்பதால் ஸாது ஜனங்கள் மகிழ்ந்தார்களோ, எவர் விசுவா மித்ரருக்கு மகிழ்வை உண்டாக்கினாரோ, எவர் தாடகாவதம் செய்தாரோ, எவர் வேள்வியைக் காத்தாரோ எவர் சிவதனுசை முறித்தாரோ, எவர் ஸீதையை மணந்தாரோ, (எவர்) வழியில் பரசுராமரை வென்றாரோ, (எவர்) பின்னர் தன் நகரான அயோத்தியை அடைந்தாரே அந்த ஸ்ரீ ராமர் நம்மைக் காக்கட்டும்!

த்யக்த்வா ராஜ்யமிதோ வனம் வசனதோ

மாதுஸ்ச காகக்ஷிகம்

தைத்யம் வ்யஸ்ய விகர்ண கோண கசரீ

பந்தூன் கராதீன் கலான்।

மாரீசம் ச நிஹத்ய ராவண ஹ்ருதாம்

ஸீதாம் விசின்வன்னிவ

ப்ராப்தோ வாயுஸீதேன சூர்ய

ஜயுஜா ராமோ அவதாத் வந்தித॥

எவர் தாயின் (கைகேயி) வரத்துக்காக தன் ராஜ்யத்தை விட்டு கானகம் சென்ற காக்கையின் கண்ணில் இருந்த குருங்காசுரனைக் கொன்று, காது மூக்கறுபட்ட சூர்பணகையின் உறவினரான கரன் முதலான அரக்கர்களையும் மாரீசனையும் கொன்று இராவணனால் அபகரிக்கப்பட்ட ஸீகையைத் தேடுபவர்கோல்(நடித்து) சூரிய குமாரன் (சுக்ரீவன்) வாயு குமாரன் (அனுமன்) ஆகியோருடன் வந்து வணங்கப்கட்டரோ அந்த ஸ்ரீ ராமர் நம்மை காக்கட்டும்.

சுக்ரீவேண ஸகித்வ மாப்ய சபதம்

க்ருத்வாவதே வாலின:

தாலான் சப்த விபித்ய வாலி நிதனம்

க்ருத்வா ஸ்வராஜ்யே ஸ்திதம்।

மார்த்தாண்டிம் ச விதாய மாருதி யுஜத

யாப்யாம் திஸம் கச்சதா

ஸீதான் வேஷண மிச்சதாப்தி தரணே

ராமோ அலாதாத் ஸோஸ்துந॥

யார் சுக்கிரீவன் நட்டைப் பெற்று, வாலியை வதைக்க சபதம் செய்து, ஏழுதால மரங்களை ஒரே அம்பால் துளைத்து, வாலியைக் கொன்று, தென் கடலைத் தாண்டவிருக்கும் மாருதியைச் சேர்ந்தாரோ அந்த ஸ்ரீ ராமர் நம்மை காக்கட்டம்.

யஸ்ய ஸ்ரீ ஹனுமான் அனுக்ரஹ பலாத்
தீர்ணாம்புதிர் லீல்யா
லங்காம் ப்ராப்ய நிஸாம்ய ராம
தயிதாம் பங்கித்வா வனம் ராக்ஷசான்।
அக்ஷாதீன் விநிஹத்ய வீக்ஷ்ய தஸகம்
தக்த்வா புரீம் தாம்புந:
தீர்ணாப்தி: கபிபிர்யுதோ யமநமத்தம்
ராமசந்த்ரம் பஜே॥

எவருடைய அருள் பலத்தால் ஸ்ரீ ஆஞ்சநேயர், விளையாட்டாய்க் கடலைத் தாண்டினாரோ, இலங்கையை அடைந்து சீதையைக் கண்டு, அசோக வனத்தை அழித்து, அக்ஷகுமாரன் முதலாம் அரக்கர்களைக் கொன்று, இராவணனைப் பார்த்து, இலங்கையை எரித்து, மீண்டும் கடலைத் தாண்டி தன் வானரக் கூட்டத்துடன் எவருடைய பாதங்களில் வணங்கினாரோ அப்பேர்ப்பட்ட ஸ்ரீ ராமனை நான் பஜிக்கிறேன்

ஸிந்தும் தக்ஷிணம் ஆகதோ தஸமுக
ப்ராத்ரிஷ்டதோ அப்யர்திதோ
பத்வா ஸேதும் அவாப்ய ராக்ஷஸபுரீம்
ஸைன்யை: கபீனாம்யுத: ।
ஹத்வேந்த்ராரி கும்பகர்ண தஸகாதீன்
ராக்ஷஸான் ஜானகீம்
அதாயாப்ய புரீம் ஸ்வராஜ்ய பதவீம்
ப்ராப்தோ அவதாத் ராகவ: ॥

தென்கடலடைந்து, சரணடைந்த இராவணனுடைய தம்பி விபீஷணனுக்கு அபயமளித்து, சமுத்திர ராஜன் கோரிக்கைக் கிணங்கி சேது அணை கட்டி, இலங்கைக்குள் வாரை சேனைகளுடன் நுழைத்து, இந்திரஜித், கும்பகர்ணன். இராவணன் முதலான அரக்கர்களைக் கொன்று, சீதையை அழைத்துக் கொண்டு அயோத்தியை அடைந்து, தன் ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து கொணட ஸ்ரீ ராகவன் நம்மைக் காக்கட்டும்.

ப்ராப்தஸ் ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம்
ப்ரியதம பரதம் யௌவ ராஜ்யே
அபிஷிச்ய ஸ்வீயான் ரக்ஷன்
ஸீதௌ த்வௌ ஜனக துஹிதரி
ப்ராப்ய யக்ஞைர்ய ஜன்ஸ்லம் ।
ஸீதா ஹேதோர் விமோஹ்ய
க்ஷிதி ஐதி ஸீதான் அர்திதோ
தேவ ஸங்கை: ஸத்பிர் யுக்தோ
ஹனுமத் வரத உபகத
ஸ்வம்பதம் பாது ராம ॥

பட்டாபிஷேகத்தை செய்து கொண்டு, தம்பி பரதனுக்கு யுவராஜானாக பட்டாபிஷேகஞ் செய்து, தன் மக்களை (ராஜ்யத்தை) காத்துக் கொண்டு சீதையிடம இருபுத்திரர்களை (லவன், குசன்) அடைந்து, வேள்விக்காக தன்மனயே பூஜித்துக் கொண்டு, சீதைக்காக பூமியில் உள்ள அசுரனைளை மயக்கி தேவகங்களால் துதிக்கப்பட்டு ஸாதுக்கள், ஆஞ்சநேயருக்கு வரமளித்து வைகுண்டம் எழுந்தருளிய அந்த ஸ்ரீ ராமர் நம்மை காக்கட்டும்!

நன்றி :

ஸ்ரீராகவேந்திர சேவாசமிதி,
பிரஸ் காலனி, கோயம்பத்தூர்

# S.S.N. துரை,
# குரு ஜோதிடர்,

108/B இரெயில்வே காலனி/
எழும்பூர்/ சென்னை-8

**ஜீன் மாத பலன்.**

**மேஷராசி:** *(அசுவனி, பரணி, கார்த்திகை 1ம் பாதம் முடிய)*

*மேஷராசி அன்பர்களே! குரு அருள் பெற்றோரே. இம்மாதம் பல சிறப்புகளை சந்திப்பீர். பெரிய மனிதர்களின் உதவி, நண்பர்களின் ஆதரவு கூடும்.பொன் பொருள் சேர்க்கை உண்டு. குடும்பத்தில் கலகலப்பு வர இடமுண்டு. எச்சரிக்கை பணம் வரும். செலவை கட்டுப்படுத்த முடியாது.பகைவர்களை அடையாளம் கண்டு கொள்வீர் வேண்டாத விஷயங்களில் ஈடுபடவேண்டாம். வியாபாரிகள், விவசாய பெருமக்கள் முன்னேற்றம் காண்பர்.மொத்தத்தில் மாத பின் பகுதி சிறப்பாக இருக்கும். பெண்களால் நன்மை உண்டு.சனிபகவானை வழி பட்டு வாருங்கள் பல நன்மைகளைப் பெறுவீர்.*

**அதிர்ஷ்ட எண்கள்: 3,6.**

**ரிஷப ராசி:** *(கார்த்திகை 2,3,4, ரோகிணி, மிருக சீருஷம் 1,2 ம் பாதம் முடிய)*

*ரிஷப ராசி அன்பர்களே!*

*இம்மாதம் புதுத்தெம்பும், மன உற்சாகமும் காணப் பெறுவீர். மறைமுகை எதிரிகள் பலம் ஒடுங்கும். போட்ட திட்டங்களை சரிவர செய்து வெற்றி வாய்பை பெறுவீர்.ஆனால் எதிலும் கடும் உழைப்பை மேற்கொள்ள வேண்டி வரும். பணம் நிறைய வரும். திட்டமிட்டு செலவு செய்யுங்கள் ஆரோக்கியம் காக்கப்படவேண்டும். குடும்பத்தில் கருத்து வேற்றுமை வரலாகாது. மக்களால் நன்மை உண்டு, பலதுறைகளிலும் உள்ள அன்பர்கள் நன்மைகளை உடையப் பெறுவீர். தெய்வ வழிபாடு*

வேண்டும். குருமாற்றம் உங்களை உயர்த்தும். சாதனைபடைப்பீர் பொறுத்திருங்கள்.

**அதிர்ஷ்ட எண்கள்: 5,6.**

**மிதுன ராசி:** *(மிருக சீருஷம் 3,4 ம் பாதம் முதல். திருவாதிரை, புனர்பூசம் 3ம் பாதம் முடிய)*

*மிதுன ராசி அன்பர்களே!*

இம்மாதம் செவ்வாயை தவிர, மற்ற கிரகங்களின் சஞ்சாரம் ஏற்புடையதாக இல்லை. பல சோதனைகளையும், வேதனைகளையும் தவிர்க்க முடியாது. தெய்வ வழிபாடு இவைகளை குறைக்கும். பொறுப்புடன் செய்யும் காரியங்களில் கூட சரிவு ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் மனகசப்பு வளரும். எல்லா காரியங்களையும் திட்டமிட்டு செய்தால் வெற்றி காண்பீர். மாத பின் பகுதி, மனத்தெளிவும், தைரியமும் உண்டாகும். தடைபட்ட காரியங்கள் கூட, சிறப்பாக முடியும். வியாபாரிகள் முன்னேற்றம் காண்பர். மற்ற துறையினர் சிறு சிறு நன்மைகளை காண்பர். தெய்வ சிந்தனை வேண்டும். நிந்தனை கூடாது.

**அதிர்ஷ்ட எண்கள்: 6,9.**

**கடக ராசி:** *(புனர்பூசம் 4ம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் 4ம் பாதம் முடிய)*

*கடகராசி அன்பர்களே!*

குரு அருள் பெற்றோரே! இம்மாதம் நீங்கள் பலப்பல புது அனுபவங்களையும், நன்மைகளையும் அடையப் பெறுவீர் தடைபட்டு வந்த திருமணம் நடைபெறும். பொன், பொருள் சேர்க்கை உண்டு. சுற்றமும், நட்பும் சூழ பல நன்மையான காரியங்களை செய்து முடிப்பீர்.ஆலயதரிசனம் பல சிறப்புகளை கூட்டும். பணம் வரும். செலவு காத்து நிற்கும். நடை பெறுவது என்று எண்ணிய காரியங்கள் கூட, சிறப்பாக முடியும். தெய்பலம் துணை நிற்கும் திட்டமிட்ட காரியங்களை செய்யுங்கள். மறைமுக எதிரிகள் உண்டு. எச்சரிக்கை சனிபகவானை வழிபட்ட வாருங்கள். மனதில் உள்ள குழப்பம் விலகும்.

**அதிர்ஷ்ட எண்கள்: 3,4.**

**சிம்ம ராசி:** *(மகம், பூரம், உத்திரம் 1ம் பாதம் முடிய)*

*சிம்ம ராசி அன்பர்களே!*

இம்மாதம் பல வெற்றிகளை சந்திக்க இருக்கிறீர். சாதனைபடைப்பீர். ஆயினும் எதிரிகளின் பலம் ஓங்கும் எச்சரிக்கை. பொருள் வரவு உண்டு. திட்டமிட்ட காரியங்களை அனேக எதிர்ப்புகளின் பேரில், பல அறிய பெரிய சாதனைகளை செய்து முடிக்க சனிபகவான் துணை நிற்பார். தொழிலாளர்கள், விவசாய பெருமக்கள், வியாபார பெருமக்கள், மாமுலான பணிகளில் ஈடுபடுவது சிறந்தது. குடும்பத்தில் சகஜநிலை ஏற்பட விட்டுக் கொடுக்கும் மனபக்குவம் வளர வேண்டும். மாத பின் பகுதியில், எதிலும் எச்சரிக்கையுடன் செயல்படுவது சிறப்பு. ஆரோக்கியம் பாதிக்க வழிஉண்டு. குரு வழிபாடு சிறப்பைக் கொடுக்கும்.

**அதிர்ஷ்ட எண்கள்: 7,8.**

**கன்னியாராசி:** *(உத்திரம் 2,3,4ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2ம்பாதம் முடிய)*

*கன்னியாராசி அன்பர்களே!*

தெய்வ பலத்தால் வாழ்ந்து வரும் சிறப்புடையோரே! இம்மாதம் உங்கள் காசிநாதன் சிறப்படைவதால் உங்கள் அறிவாற்றல் திறன் பூரண மாத வெளிப்படும். சாதனை படைப்பீர். பெண்களால் பல நன்மைகளை பெறுவீர். ஆயினும், மனம் ஏதோ இழந்த நிலையில் சஞ்சலப்பட்டுக் கொண்டு இருக்கும் தசா, புக்தி சிறப்பாக உள்ளவர்கள், தெய்வ அருளால் எதிர்பாராத யோகங்களை பெறுவர். அதிகாலை தியானம் உங்கள் வாழ்கையில் பல சிறப்புகளை கூட்டும், பணம்வரும், செலவு காத்து நிற்கும், பொறுத்திருங்கள், குருமாற்றம், உங்கள் வாழ்கையில் பல சிறப்பான திருப்பங்களை செய்யும். பல துறைகளில் ஈடுபட்டுள்ளோர், அவர் அவர் நிலைக்கு ஏற்ப முன்னேற்றம் காண்பர். சனிவழிபாடு சிறந்தது.

**அதிர்ஷ்ட எண்கள்: 6,7.**

**துலதராசி:** *(சித்திரை 3,4ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய)*

*துலாராசி அன்பர்களே!*

*குரு அருள் பெற்றோரே!*

*இம்மாதம் பலர் உங்களை பாராட்டும் அளவுக்கு தங்கள் செயல்கள் சிறப்பாக முடியும். பொன் பொருள் சேர்க்கை உண்டு. எடுத்த காரியங்களை எளிதில் முடிக்க, அலைச்சலை மேற்காள்ள வேண்டிவரும். சுலபமாக முடிய வேண்டிய காரியங்கள் கூட காலதாமத்தின் பேரில் முடியும். சனிபகவானை வழிபட்டுவர பல சிறப்புகள் கூடும் குடும்பத்தில் மாமூலலான காரியங்கள் நடந்தேரும். சுற்றம் சூழ நற்காரியங்களில் ஈடுபடுவீர். அவர்களின் அன்பு அறவணைப்பும் உண்டு. தெய்வ வழிபாடு சிறப்புகளை கூட்டும்.*

**அதிர்ஷ்ட எண்கள்: 3,4.**

**விருச்சிகராசி:** *(விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை 4ம் பாதம் முடிய)*

*விருச்சிக ராசி அன்பர்களே!*

*சனிபகவானின் அருளாசி பெற்றோரே இம்மாதம் எதிலும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. பொறாமைக்கண்கள் ஆச்சரிப் படும்படியான அளவில் நீங்கள் சாதனை படைப்பீர். தனி தைரியம் பிறக்கும். வருவாய்க்கு ஏற்ற செலவு ஏற்படும். சில சமயம் பற்றாக் குறை ஏற்படும். பெரியோர்களின் அன்புக்கு பாத்திரமாகுங்கள் பல சிறப்புகள் கூடும். அதிகாலை தியானம், குருவழிபாடு வாழ்கை மேன்மைகளை கூட்டும். ஆரோக்கியம் பாதிக்க இடமுண்டு. பொறுத்திருங்கள், வருகிற குரு மாற்ற, பல யோகங்களை அள்ளிதர வழி உண்டு. நம்பினவர் கெடுவதில்லை. தெய்வத்தை நம்புங்கள்.*

**அதிர்ஷ்ட எண்கள்: 8,9.**

**தனுர் ராசி:** (மூலம், பூராடம், உத்திராடம் 1ம் பாதம் முடிய)

தனுர்ராசி அன்பர்களே!

குருபலம் கொண்டோரே!

இம்மாதம் பாத சனி வேகத்தை உணர்வீர். பல சோதனைகளும், வேதனைகளும் உங்களை ஆட்டிப்படைக்கும். தெய்வவழிபாடு நிம்மதி தரும். நம்பிக்கை இழக்காதீர், சனிபகவானை வழிபட்டு வாருங்கள். அந்த ஈஸ்வரன் உங்களின் கஷ்டங்களை போக்குவார். உடலில் காயம்பட வழி உண்டு. எச்சரிக்கை தேவை. குடும்பம் சாதாரண நிலையில் இயங்கும். பணம் வரும், பலவழியில் செலவும் ஆகும். சில நேரங்களில் பற்றாக்குறை ஏற்படும். இம்மாத கிரக சஞ்சாரம் சரியில்லை. அதிகாலை தியானம், ஆலயம் தரிசனம், குறைகளை போக்கும்.

**அதிர்ஷ்ட எண்: 3.**

**மகர ராசி:** (உத்திராடம் 2,3,4ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 1, 2ம் பாதம் முடிய)

மகரராசி அன்பர்களே!

இம்மாதம் முக்கிய கிரகங்களான குருபகவான், சனிபகவான் சஞ்சாரம் சிறப்பாக இல்லை. எதிலும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். பணம் வரும். ஆனால் பற்றாக்குறை இருக்கத்தான் செய்யும். திட்டமிட்டக் காரியங்கள் கூட சரிவர செய்ய முடியாத நிலை உருவா-கும். குருபகவான், சனிபகவான் வழிபாடு, சிறப்புடையது. இம்மாதம் புதுப்பணியில் செயல்படவேண்டாம். மறைமுக எதிரிகளால் தொல்லை வரம். எச்சரிக்கை தேவை. குடும்பத்தில் விட்டுக் கொடுத்து போக வேண்டும். புதுத்திட்டங்க ளில் செயல்பட இன்னும் காலம் கனிந்து வரவில்லை. பொருத்திருங் கள். குருமாற்றம் நன்மைகளை அளிக்கும். நம்பினார் கெடுவதில்லை.

**அதிர்ஷ்ட எண்கள்: 5,7**

**கும்பராசி:** *(அவிட்டம் 3,4ம் பாதம் முதல் சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய)*

*கும்பராசி அன்பர்களே!*

*குரு அருள் பெற்றோரே! இம்மாதம் பல சிறப்புகளை காண்பீர். உங்கள் கௌரவம், அந்தஸ்து உயரும். கேட்ட இடத்தில் பணம் வரும். தடைபட்ட காரியங்கள் கூட சுமுகமாக முடியும். சுற்றமும், நட்பும், அனுகூல சூழ்நிலையில் துணை நிற்பர். விருந்து கேளிக்கைகளல் பங்குபெற்று மகிழ்ச்சி பெறுவீர். குடும்பம் மாமூலாக க இயங்கினாலும், சிறு சிறு சச்சரவுகள் வரத்தான் செய்யும். வியாபாரிகள் முன்னேற்றம் பெறுவர். சிலர் வெளி நாடு செல்ல வழிபிறக்கும். மொத்தத்தில் இம்மாதம் உங்கள் மனதில் தெளிவுடன் தனிதைரியம் பிறக்கும். வேலை தேடி அலைந்தவருக்கு வேலை கிடைக்கும். சனிபகவானை வழிபட்ட வாருங்கள், நன்மைகள் பெருகும்.*

**அதிர்ஷ்ட எண்கள்: 3,9.**

**மீனராசி:** *(பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி 4ம் பாதம் முடிய)*

*மீனராசி அன்பர்களே!*

*சனிபகவானின் அருள் பெற்றவரே, உங்களின் அறிவு ஆற்றலால் பல சாதனைகளை படைப்பீர். தனி தைரியம் பிறக்கும். மனக்குழப்பத்திற்கு நிம்மதி பெறுவீர். குரு வழிபாடு சிறப்புடையது. பொன், பொருள் சேர்க்கை உண்டு. பணம் வரும், செலவுகளை கட்டுப்படுத்துங்கள். அயல் நாட்டு தொடர்பு உள்ளவர்களுக்கு நல்ல ஆதாயம் உண்டு. மறை முக எதிரிகளின் பலம் ஒடுங்கும். திடீர் யோக்த்திற்க்கு வழி இல்லை. தர்ம காரியங்களில் ஈடுபட மனம் நாடும். சுற்றமும், நட்பும் துணை நிற்கும். பெண்களால் ஆதாயம் உண்டு. பற்று இல்லாத விஷயங்கள் கூட பற்று உள்ளதாக மாறும். அதிகாலை தியானம் சிறப்புகளை கூட்டும். பொருத்திருங்கள், குருமாற்றம், இன்னும் பல சிறப்புகளை கூட்டும்.*

**அதிர்ஷ்ட எண்: 8.**